# திருவையாறு - சம்பந்தர் தேவாரம் (1):

<-- திருவையாறு

(1)
புலனைந்தும் பொறிகலங்கி, நெறிமயங்கி, அறிவழிந்திட்டு, ஐம்மேலுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென்று அருள்செய்வான் அமரும் கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர மழைஎன்றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரமேறி முகில்பார்க்கும் திருவையாறே

(2)
விடலேறு படநாகம் அரைக்கசைத்து, வெற்பரையன் பாவையோடும்
அடலேறு ஒன்றதுஏறி, அஞ்சொலீர் பலி என்னும் அடிகள் கோயில்
கடலேறித் திரைமோதிக் காவிரியின் உடன்வந்து கங்குல்வைகித்
திடலேறிச் சுரிசங்கம் செழுமுத்தம் ஈன்றலைக்கும் திருவையாறே

(3)
கங்காளர்; கயிலாய மலையாளர்; கானப்பேராளர்; மங்கை
பங்காளர்; திரிசூலப் படையாளர்; விடையாளர் பயிலும்கோயில்
கொங்காளப் பொழில்நுழைந்து, கூர்வாயால் இறகுலர்த்திக், கூதல்நீங்கிச்
செங்கானல் வெண்குருகு பைங்கானல் இரைதேரும் திருவையாறே

(4)
ஊன்பாயும் முடைதலை கொண்டு ஊருரின் பலிக்குழல்வார்; உமையாள் பங்கர்
தான்பாயும் விடையேறும் சங்கரனார்; தழல்உருவர் தங்கும் கோயில்
மான்பாய வயலருகே, மரமேறி மந்திபாய் மடுக்கள் தோறும்
தேன்பாய மீன்பாயச், செழுங்கமல மொட்டலரும் திருவையாறே

(5)
நீரோடு கூவிளமும், நிலாமதியும், வெள்ளெருக்கு நிறைந்த கொன்றைத்
தாரோடு தண்கரந்தை சடைக்கணிந்த தத்துவனார் தங்கும் கோயில்
காரோடி விசும்பளந்து, கடிநாறும் பொழிலணைந்த கமழ்தார் வீதித்
தேரோடும் அரங்கேறிச் சேயிழையார் நடம்பயிலும் திருவையாறே

(6)
வேந்தாகி விண்ணவர்க்கு மண்ணவர்க்கு நெறிகாட்டும் விகிர்தனாகிப்
பூந்தாம நறுங்கொன்றை சடைக்கணிந்த புண்ணியனார் நண்ணும் கோயில்
காந்தாரம் இசையமைத்துக் காரிகையார் பண்பாடக் கவினார் வீதித்
தேந்தாமென்று அரங்கேறிச் சேயிழையார் நடமாடும் திருவையாறே

(7)
நின்றுலா நெடுவிசும்பு நெருக்கிவரு புரமூன்று நீள்வாய் அம்பு
சென்றுலாம்படி தொட்ட சிலையாளி; மலையாளி சேரும் கோயில்
குன்றெலாம் குயில்கூவக் கொழும்பிரச மலர்பாய்ந்து வாசமல்கு
தென்றலார் அடிவருடச் செழுங்கரும்பு கண்வளரும் திருவையாறே

(8)
அஞ்சாதே கயிலாய மலையெடுத்த அரக்கர்கோன் தலைகள்பத்தும்
மஞ்சாடு தோள்நெரிய அடர்த்தவனுக்கருள் புரிந்த மைந்தர் கோயில்
இஞ்சாயல் இளந்தெங்கின் பழம்வீழ இளமேதி இரிந்தங்கோடிச்
செஞ்சாலிக் கதிர்உழக்கிச் செழுங்கமல வயல்படியும் திருவையாறே

(9)
மேலோடி விசும்பணவி, வியன்நிலத்தை மிகஅகழ்ந்து மிக்குநாடும்
மாலோடு நான்முகனும் அறியாத வகைநின்றான் மன்னும் கோயில்
கோலோடக் கோல்வளையார் கூத்தாடக் குவிமுலையார் முகத்தினின்று
சேலோடச் சிலையாடச் சேயிழையார் நடமாடும் திருவையாறே

(10)
குண்டாடு குற்றுடுக்கைச் சமணரொடு சாக்கியரும் குணமொன்றில்லா
மிண்டாடு மிண்டர்உரை கேளாதே, ஆளாமின் மேவித்தொண்டீர்
எண்தோளர் முக்கண்ணர் எம்ஈசர் இறைவர் இனிதமரும் கோயில்
செண்டாடு புனல்பொன்னிச் செழுமணிகள் வந்தலைக்கும் திருவையாறே

(11)
அன்னமலி பொழில்புடைசூழ் ஐயாற்றெம் பெருமானை அந்தண்காழி
மன்னியசீர் மறைநாவன் வளர்ஞான சம்பந்தன் மருவுபாடல்
இன்னிசையால் இவைபத்தும் இசையுங்கால் ஈசனடி ஏத்துவார்கள்
தன்னிசையோடு அமருலகில் தவநெறி சென்றெய்துவார் தாழாதன்றே